ஓம்.

பரப்ரம்மணே நமஃ

# திருவள்ளுவர் முதற்குறள்.

"அகரமுதலவெழுத்தெல்லாமாதி
பகவன்முதற்றேயுலகு."

## பரிமேலழகர்உரை.

"எழுத்துக்களெல்லாம் அகரமாகிய முதலை யுடையன. அதுபோல உலகம் ஆதிபகவனாகிய முதலையுடைத்து என்றவாறு.

இது தலைமைபற்றிவந்த எடுத்துக்காட்டுவமை. அகரத்திற்குத் தலைமை விகாரத்தானன்றி நாதமாத்திரையாகிய இயல்பால் பிறத்தலானும், ஆதிபகவற்குத் தலைமை செயற்கையுணர்வானன்றி இயற்கை யுணர்வான் முற்று முணர்தலானுங் கொள்க. தமிழ் எழுத்திற்கேயன்றி வடவெழுத்திற்கும் முதலாதல் நோக்கி எழுத்தெல்லாம் என்றார். ஆதிபகவன் என்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகை வடநூன்முடிபு. உலகென்றது ஈண்டு உயிர்கள்மேல் நின்றது. காணப்பட்ட உலகத்தால் காணப்படாத கடவுட்கு உண்மை கூறவேண்டுதலின், ஆதிபகவன் முதற்றே யென உலகின்மேல் வைத்துக் கூறினார்; கூறினாரேனும் உலகிற்குமுதல் ஆதிபகவனென்பது கருத்தாகக் கொள்க."

இந்தக்குறளால் அகரத்திற்கும் மற்ற எழுத்துக்களுக்கும் முதற்காரண காரிய சம்பந்தம் ஏற்படுகின்றது. யாங்ஙனென்னின் அகரமானது வாயின் அங்காத்தலினாலே பிறந்து அவ்வங்காத்தலின் விகாரத்தாலே மற்ற இகர முதலிய வுயிரெழுத்துக்களும் மெய்யெழுத்துக்களும் பிறக்கின்றன வாதலா னென்க. பூர்வபக்ஷியா ரொருவர் உயிரெழுத்துக்களேயன்றி மெய்யெழுத்துக்கள் அதிற் சேரா வென்றனர். இது பொருந்தாது. நாயனார் கருத்து அங்ஙனமாயின் எழுத்தெல்லாமெனக் கூறார். அதன்மேல் உயிரெழுத்தும் மெய்யெழுத்தும் வேறு வேறு சாதியாகலின் ஒன்றிலிருந்து மற்றொன்று உற்பத்தியாகா வென்று சங்கை செய்கின்றார். வேறு வேறு சாதியாயின் ஒன்றிலிருந்து மற்றொன்று உற்பத்தியாகா வென்பதற்கு நியாயமென்னை? அதனோடு "உயிர் ஏறிநடத்துகிற சாதியும் மெய்கள் தாங்கிச் சுமக்கிற சாதியுமாகி விளங்கலால் சுமக்கிற சாதி யெப்படி யேறுகிற சாதியாகும்? பாகனுங் குதிரையும் ஒருசாதியாகக்கண்ட அநுபவிகளுக்கு உயிரும் மெய்யும் ஒன்றாகுமேயல்லது பாகன் வேறு, குதிரை வேறு என்று தெளிந்தவர்க்கு உயிர் வேறும் மெய் வேறுமாக இரண்டு தனித்த சாதிகளுண்டென்றே கொள்ளப்படும்" என்கிறார். இது பொருந்தாது. ஒரு மலையிலிருந்து கொண்டுவந்த கற்களினாற் கட்டப்பட்ட மண்டபத்தில் ஒன்று தாங்குகிறதாயும், ஒன்று தாங்கப்பட்டதாயும் இருக்கவில்லையா? அம்மலையிலிருந்தே கொண்டுவந்த கற்களில் ஒன்று நாம் வணங்கும் தேவதாபிம்பமாகவும், ஒன்று நமது காலின் கீழ்த் தரையாகவு மிருக்கவில்லையா? ஒரு வித்திலிருந்துண்டான விருக்ஷத்தில் பழம் இனிமையாகவும், பிஞ்சு, காய் இனிமை யல்லாதனவாகவு மிருக்கவில்லையா? ஒரு இரும்பிலிருந்துண்டான வாள்அரம்ஆகிய இரண்டனுள் வாளை அரம் அறுக்கவில்லையா? ஒரே ஓசையானது குயிலின் வாயிலாக இனிமை

யாகவும், காகத்தின் வாயிலாக வெடிப்பாகவும் வரவில்லையா? ஒரு சாதியெழுத்திலிருந் துண்டான சொற்றொடர் வாக்கியங்களில் ஒன்று மரியாதையாகவும், ஒன்று அவமரியாதையாகவும் இருக்கவில்லையா? ஒரு செடியிலிருந் துண்டான மூங்கில்களி லொன்று அரசன் தலைமேலும் ஒன்று கழைக்கூத்தன் காலின் கீழுமிருக்கவில்லையா? ஒரு மனிதவுடலிலிருக்கு மவயவங்களில் ஒன்று ஆதாரவது இடுப்பு சுமப்பதாகவும் தலைமார்புமுதலியன சுமக்கப்படுவனவாகவு மிருக்கவில்லையா? அதேயுடலிலிருந்துண்டான அவயவங்களில் கைவந்தனம் பெருமையாகவும் கால்வந்தனம் சிறுமையாகவும் மதிக்கப்படவில்லையா? இவ்வாறு ஒன்றிலிருந்துண்டாய் மேலும் கீழுமான பேதத்தைப் பெற்றிருப்பவை யெத்தனையோ உளவே. அங்ஙனமாக வுயிரும் மெய்யும் ஒன்றிலிருந் துண்டானவென வெங்ஙனங் கூறத் துணியலாம்? இவர் காட்டியவைதைப் பார்க்கிலும் அதிக பேத வுவமானங்களைக்காட்டி அவை ஒரு பொருளிலிருந்தே யுண்டாயினவாக விளக்கியிட்டமையால் பூர்வபக்ஷியார்வாதம் நிஷ்பலமாயிற்றென்க.

பின்னும் ஆக்ஷேபம் வருமாறு:—"மெய்கள் அகரவுயிரினின்றும் வந்தனவாகக் கொள்ளுமிடத்துப் பொன்னினின்றும் வந்த பூஷணங்கள் மாற்றுரைகளில் தாழாது நிற்றல்போல அகரத்தைப்போலவே எழுத்துக்களி லேறி யியங்கப்பண்ணும் ஆற்றலுடையனவாயிருத்தல் வேண்டும்" என்று கூறுகின்றார். பொன்னின்றன்மை பூஷணத்தி லிருப்பதுபோல அகரத்தின் றன்மை மெய்யின்கண் இருக்கவேண்டுமாம். அப்படியிருந்தாற்றான் ஒப்புக் கொள்வாராம். மரத்தாற்செய்த யானைவாகன மொன்றனைப் பார்த்து வந்தானொருவன். அவனை நோக்கி: "நீ பார்த்துவந்த வாகனம் என்ன மரத்தாற் செய்யப்பட்டது?" எனக்கேட்கின், "இன்னமரமென யான்பார்க்கவில்லையே" என்கின்றான். யானைவாகனத்தில் மரம் காரணம்; யானை காரியம். இதில் காரணத்தின்றன்மை காரியத்தில் வெளிப்பட்டதா? வெளிப்பட்டதாயின் இன்ன மரமென் றேன்சொல்லவில்லை? பாலைமரத்தினாலியற்றப்பட்ட சிங்கமொன்றனைக்கண்டு ஒருவன் பயந்தானென வைத்துக்கொள்வோம். இதில் காரணத்தின்றன்மை காரியத்தில் வெளிப்பட்டதா? வெளிப்பட்டதாயின் காரணமான பாலைமரத்தைக் கண்டபோதும் பயப்படவேண்டும். இதுநிற்க, பூஷணத்திலுள்ள விசித்திரம் பொன்னின்கணுளதா? வித்திலிருந்துண்டான விருக்ஷத்திலும் இந்திரசால சத்தியிலிருந்துண்டான இந்திரசாலப் பொருளிலும் காரணத்தின்றன்மையைக் காரியத்திற் காட்டுவாரா? இவரபிமதப்படி சிவஞானந் தழைத்துண்டான (பன்றிக்குட்டிகட்காக வெடுத்த) பன்றியுருவத்திலும், பரமசிவன் திருக்கண்களிலிருந்துண்டான அக்கினியாலாகிய சுப்பிரமணியரிடத்திலும் காரணத்தின் தன்மையைக் காட்டுவாரா? இவ்வாறு அகரத்தின்றன்மை மெய்யெழுத்தில் இல்லாமலும் போகவில்லை. யாங்ஙனெனின் அகரத்தைப்போலவே மெய்யெழுத்தும் அங்காப்புக்கொண்டே யுச்சரிக்கப்படுகின்றமையா னென்க. இகரமுதலிய வுயிர்கள் எங்ஙனம் அங்காப்பின் காரியமாக இருக்கின்றனவோ, அங்ஙனமே மெய்யெழுத்துக்களும் அங்காப்பின் காரியமாகவே யிருக்கின்றன வென்க.

பூர்வபக்ஷியார் சொல்லும் மற்றொரு விஷயத்தையும் பார்ப்போம். அது "மெய்கள் தாமே யியங்கும் ஆற்றலைப்பெறாது உயிர்களைத் துணைக்கொண்டு அங்காத்தலைப்பெற்று வருமுண்மையை யறியாமல், மெய்கள் தாமே அங்காந்து வருமென்பது அறியாமையேயாம். (இக்) என்றபோதினும் (க) என்றபோதினும் உயிர்த்துணையை முன்னும் பின்னுமாகக்கொண்டு தன்னொலியைக் காட்டுகின்றமெய்யை, அதனையொலிப்பித்த வுயிர்பேதமே யென்பது

காலத்திரயத்தும் மேலோ ரங்கீகரியாரென்க" என்பதாம். அங்ஙனமாயின் இந்தத்தோஷம் இகரமுதலிய எழுத்துகட்கு முண்டு. உயிர்த்துணையின்றி எங்ஙனம் மெய் யொலியாதோ, அங்ஙனமே அகரத்தின் றுணையின்றி அதாவது அகரத்தின்அங்காப்பின்றி இகரமாதி யுயிர்களும் ஒலித்தல் செய்யா. மெய்கள் உயிர்த்துணையைக் கொண்டுவரும் என்றதின்மேல் ஒரு கேள்வி கேட்கின்றோம். அஃது யாதெனின், "உயிரையின்றி அதிலும் அகரத்தின் அங்காப்பின்றி, மெய்யென்பதொன்றிருந்து, அது உயிர்த்துணையைப்பெற்று ஒலிக்கின்றதா? அல்லது, தான், உயிரிலிருந்தே அதாவது அகரத்தின் அங்காப்பிலிருந்தே யுண்டாய், அவ்வுயிர்த்துணையைக்கொண்டே யொலிக்கின்றதா?" என்பது. கையானது இறகினது துணையைக்கொண்டு எழுதுகின்றது. இப்படியே மெய்யானது உயிரினது துணையைக்கொண்டு ஒலிக்கின்றதென்னின், கையிருக்கினும் இல்லாதுபோயினும் கைக்குப்பின்னமாய் இறகு இருப்பதுபோல, உயிரிருக்கினும் இல்லாதுபோயினும் அதாவது அகரத்தின் அங்காப்பு இருக்கினும் இல்லாதுபோயினும் மெய்யெழுத்துக்கள் இருத்தல் வேண்டும். இருந்து உயிர்த்துணையைக் கொண்டு ஒலித்தல்வேண்டும். அங்ஙனம் உயிரின்றி யிருப்ப தன்மையாயின் அகரத்தின் அங்காப்பின்றி அதாவது வாயை மூடிக்கொண்டு மெய்யெழுத்துக்கள் உச்சரிக்கப்படவேண்டும். மெய்யெழுத்துக்களான ககார, ஙகாராதிகள் நாக்கினடி மேல்வாயடி முதலியவைகளால் பிறக்குமெனத் தொல்காப்பியங் கூறுகின்றது. இதுபோலவே இகரமாதியுயிர்களும்அண்பல்லைநாக்கடியினதுஓரமாய்ப்பொருந்தப்பிறக்குமென்று கூறுகின்றது.இகரமாதிகள் எப்படி அகரத்தின் அங்காப்போடுதித்து அங்காப்புள்ள அவ்வகரத்தின் றுணையைப்பற்றியொலிக்கின்றனவோ,அப்படியே மெய்யும்அகரத்தின் அங்காப்பினின்றே யுதித்துஅதன் றுணையைக்கொண்டே ஒலிக்கின்றதென்க. இதை யிவருமொத்துக்கொண்டே 'மெய்கள் தாமேயியங்கும் ஆற்றலைப்பெறாது உயிர்களைத் துணைக்கொண்டு அங்காத்தலைப்பெற்று வருமுண்மையை யறியாமல்' என்றார்.

தொல்காப்பியமுதலிய இலக்கண நூற்களில் அகரத்தின் அங்காப்புடனே மெய்களுச்சரிக்கப்படுமெனச் சொல்லவில்லையே என்னின் அங்காப்பின்றி அதாவது வாயை மூடிக்கொண்டேனும் உச்சரிக்கப்படுமெனக் கூறியிருக்கின்றதா? இன்றே. அந்நூலாசிரியர்கள் நாக்கினடி மேல்வாயடி பொருந்தப்பிறக்குமென்று சொன்னதேபோதியதாம்; வாயைத்திறத்தலின்றி நாக்கினடி மேல்வாயடியைப் பொருந்த உச்சரித்த லாகாமையானென்க.

"ஒற்றொலியைக் கண்ணொளியென்றும், உயிரொலியைக் கதிரொளியென்றும் கொண்டுணர்க" என மற்றொரு உவமானங் கூறுகின்றார். சூரியனொளியை யின்றிக் கண்ணுக் கொளியிராமையானும், சூரியனொளியே கண்ணொளியாயிருக்கின்றமையானும் இவ்வுவமானம் நமக்குச்சாதகமும், பூர்வபக்ஷியாருக்குப் பாதகமுமாமென்க. கண்ணுக்குச் சுயமா யொளியுண்டெனக் கூறுவாராயின், அகரத்தின் அங்காப்பின்றி மெய்யெழுத்துக்கள் இருக்கவேண்டும். அங்ஙன மின்றென்பதற்கு இலக்கணமும், நமது அநுபவமும் சாக்ஷியாம். கண்ணொளி கதிரொளி விஷயம் எவ்வகையினும் இவருக்குப் பொருத்தமுறாது.

"இதுகாறும் காட்டிவந்த நியாயங்களால் அகரமும் மற்றையுயிர்களும் ஒன்றென்றும், உயிர்களும் மெய்களும் வேறென்றும், சிவமும் மற்றை மூர்த்தங்களும் ஒன்றென்றும், சிவமூர்த்தங்களும் ஆன்மாக்களும் வேறென்றும் நன்கு விளங்குகிறதாகையால், ஆன்மாக்கள் சிவத்தினின்றும் வந்தனவென்னும் விரோதஞானம் விலகிப்போயிற்றென்க" எனப் பின்னு மொருவாதத்

தொடுக்கின்றார். இதனால் அகரமும், மற்றவுயிர்களும் ஒன்றெனவும், உயிர்களும் மெய்களும் வேறெனவும், இதன்படி யுவமேயத்தில் பிரமமும் பிரமமூர்த்தங்களும் ஒன்றெனவும், பிரமமூர்த்தங்களும் உயிர்களும் வேறெனவும் ஆகின்றன. நாயனார் அகரஸ்தானத்தில் பிரமத்தையும் மற்ற எழுத்துக்கள் ஸ்தானத்தில் உலகையும் வைத்தார். இவர் அகரஸ்தானத்தில் பிரமத்தை வைத்தாலும் மற்ற எழுத்துக்கள் ஸ்தானத்தில் பிரமமூர்த்தங்களை வைக்கின்றார். நாயனார் பிரமத்தை யுலகுக்கு முதலென்ன, இவர் பிரமமூர்த்தங்கட்குப் பிரமம் முதலென்கிறார். 'ஆதிபகவன் முதற்றே யுலகு' என நாயனார் பிரத்தியக்ஷமாய்க் கூறுகின்றமையின் இவர் கூற்று அவர் கூற்றினும் வேறுமென்றறிக. 'உலகென்றது ஈண்டு உயிர்கள்மேல் நின்றது' எனப் பரிமேலழகரும் கூறுகின்றமையின் பரிமேலழகர் கூற்றினுக்கும் இவர்கூற்றுவேறுமென்றறிக.

பரிமேலழகர் 'காணப்பட்டவுலகத்தால் காணப்படாத கடவுட்கு உண்மை கூறவேண்டுதலின்' எனக் கூறிட, இவர், காணப்படாத பிரமமூர்த்தத்தால் காணப்படாத பிரமத்துக்கு இருப்புக் கூறவருகின்றார். நாயனார் கருத்தும், பரிமேலழகர் அபிப்பிராயமும் பிரத்தியக்ஷத்தைக்கொண்டு அப்பிரத்தியக்ஷத்தை யறியவேண்டுமென்பது. இவர்கூற்றோ, அப்பிரத்தியக்ஷத்தைக் கொண்டு அப்பிரத்தியக்ஷத்தை யறியவேண்டுமென்பது. அவர் அநுமான அளவையாலே கடவுளைச் சாதிக்கின்றார். இவர் எந்த அளவையால் சாதிக்கின்றனரோ அறியேம்.

"எழுத்துக்கடோறும் அகரஞ் சென்றிருப்பதுபோல ஆன்மாக்கடோறும் சிவம் வியாபித்துடையது" எனப் பேசுகின்றார். எழுத்துக்கள் என்பதை இகரமுதல் உயிரெழுத்துக்களும் மெய்யெழுத்துக்களும் எனவும், ஆன்மாக்கள் என்பதைச் சேதனசேதனவுலகு எனவும் வைத்துக்கொள்ளின் சரியானதுதான். இதற்கு மாறாக முன்னர்ப் பேசியது குறளின் பொருளன்று.

"உயிரும் மெய்யும் கலந்திருத்தல்போல் ஆன்மாவும் பரமான்மாவும் விரவிநிற்கு முண்மையையறியாமல் விசாரஹீனத்தினால் உயிரும் மெய்யும் ஒன்றேயென்றும், இரண்டாயின் சமானப்பொருளாமே யென்றும் சொல்லித் திரிவாரை நம்மில் வேறு பேரிட்டழைப்பதே யுத்தமம்" என்கிறார். க் என்னும் மெய்யெழுத்தும்; அ என்னும் உயிரெழுத்தும் ஒன்று கூடினால் க என்றாகின்றது. இந்தச் சம்பந்தத்தைத்தான் 'விரவிநிற்கு முண்மை' என்கிறார். க என்பது ஒரு எழுத்தாகவும், அதைப்பிரித்தால் க், அ என இரண்டெழுத்தாகவும் இருக்கின்றன. 'ஆன்மாவும்பரமான்மாவும்விரவி நிற்குமுண்மை' க்குக் க என்னும்எழுத் துவமானமாகும். இவர், உயிர்ஸ்தானத்தில் க் என்னும் மெய்யெழுத்தையும், அ என்னும் உயிர்ஸ்தானத்தில் பரமான்மாவையும் வைத்து ஒன்றுபடுத்துகின்றார். க என்னும் எழுத்தைப் பார்த்தால் ஒன்றாயும் அதனைப்பிரித்தால் இரண்டாயுமிருக்கின்றன. இதுதான் இவரது முத்திநிலைமை. நாம் உவமானத்தை யெடுக்கின் இயற்கைப்பொருளை யெடுக்கவேண்டுமேயன்றிக் கற்பிதப்பொருளை யெடுக்கப்படாது. உவமானங் கற்பிதமானால் உவமேயமுங் கற்பிதமாம். திருட்டாந்தமாக மனிதனை யுயர்திணையென இலக்கணங் கூறுகின்றது. மனிதப்பொருளை ஆராயின் அது உடல் உயிராகும். அவ்வுடலும் உயிரும் அஃறிணையென அவ்விலக்கணமே கூறுகின்றது. இரண்டு அஃறிணைப்பொருள் சேரின் ஒரு உயர்திணையாமா? அவ்வாறு எவ்விலக்கணத்திலேனும் விதியுளதா? இன்றே. "மண்ணாற்செய்த குடம்" என்புழி மண் காரணம், குடங் காரியம். மண்ணினிடத்து வளைதலாதித் தொழிலிகழுங்கால் குடமென்று சொல்லப்படுகின்றது. தொழில் பொருளன்று, அங்ஙனமிருந்தும் குடத்தைப் பொருட்பெயரென இலக்கணங் கூறு

கின்றது. இவ்வாறு ஒவ்வொன்றும் இயற்கைக்கும் அநுபவத்துக்கும் மாறாக இலக்கணங் கற்பிக்கக் காண்கின்றோம். இலக்கணம் அப்படித்தான் கூறும்; அதுதான் அதற்குநியாயம். இலக்கணத்தை எதுமட்டும் கையாளவேண்டுமோ, அதுமட்டுந்தான் கையாளவேண்டும். பதந் தப்பினால் அமிர்தமும் விஷமாம். அங்ஙனமாக இப்படிப்பட்ட இலக்கண விதியை ஓர் ஆதரவாகக்கொண்டு த்வைதாசூணிய மேதுமின்றி,

"பொருளல்லவற்றைப்பொருளொன் றுணரும்
மருளானு மாணுப்பிறப்பு"

"எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு"

என்றவாறு பொருளைப்பொருளாகவும் பொருளல்லவற்றைப் பொருளல்லவாகவும்நவேுநிலைகோடாதுவிசாரிக்கும்வைதிகநூலுக்கு மாறுகப்பேசுவது கூடுமா? கூடாதென்பதற்கு இவர்காட்டிய உயிர்மெய்யெழுத்துவமானத்தைக் கொண்டே விளக்குவாம். எழுத்துகட்கு வடிவமிரண்டு; ஒன்று ஒலிவடிவம், ஒன்று வரிவடிவமாம். க் என்னும் மெய்யெழுத்துக்கு மாத்திரை அரை, அ என்னும் உயிரெழுத்துக்கு மாத்திரை யொன்று, ஆக வொன்றரைமாத்திரையாம். நாம் எவ்வளவு சாமர்த்தியமாக வுச்சரிக்கினும் இயற்கைப்பிரமாணந் தவறி ஒன்றரைமாத்திரை யொருமாத்திரை ஆகா. எழுத்துக்கு முதற்காரணம் அணுத்திரளொலி. பல அணுத்திரளொலி சேர்ந்தே ஒரு எழுத்தாகின்றது. அரைமாத்திரையானாலுஞ் சரி, ஒரு மாத்திரை யானாலுஞ் சரி, அதது தன்தன் மாத்திரை அளவில் அணுவுங் குறையாது. குறையாமையால் குறைவாக வொலித்தல் செய்தல் எவரானும் ஆகாதகாரியம். அங்ஙனமாகவும் இலக்கணமானது ஒன்றரை மாத்திரையை யொரு மாத்திரையாகச் சொல்லும்படி கற்பிக்கின்றது. இது நமது கற்பிதமேயன்றிப் பொருளின் உண்மைநிலைமையன்று. க் என்னுஞ் சத்தத்தோடு அ என்னுஞ் சத்தஞ்சேர்ந்தால் (எவ்வளவு நெருக்கினாலும்) ஒன்றன்பின் ஒன்றாய் அவைகளி னியற்கைப்படி ஒன்றரைமாத்திரை சத்திக்குமேயன்றி ஒருமாத்திரை சத்திக்காது; ஒன்றிலொன்று அடங்கவும் அடங்காது. இதற்குக் காரணம் ஒரு சத்தத்தில் மற்றொரு சத்தமிருக்க நியாயப்பிரமாண மில்லாமையே; ஒருபொருளில் மற்றொரு பொருளிருக்க நியாயப்பிரமாணமில்லாமைபோல. அணுத்திரள் ஒலியில் ஒருஅணு இருக்கிற விடத்தில் பிறிதொருஅணு இராதெனின், அரைமாத்திரை யொலியில் ஒருமாத்திரை கூடிக் கணிதநூற்படி யொன்றரை மாத்திரையாக, அதற்கு விரோதமாய் எப்படி யொன்றாகப்போகிறது?

இனி வரி வடிவத்தைப்பற்றியும் சிந்திப்பாம். க் என்னும் மெய்யெழுத்தை மையினாலெழுதி, அதன்பேரில் அ என்னும் உயிரெழுத்தை யெழுதினால் ஒன்றின்பேரி லொன்று, அதாவது கீழே க் கும்,மேலே அ வ்வுமிருக்குமேயன்றி, இரண்டும் ஒன்றாதல் யாங்ஙனம்? இயற்கைப்பிரமாணம் இங்ஙனமாகவும் க் என்னும் எழுத்து, அ என்னும் எழுத்து ஆக இவ்விரண்டெழுத்திற்குப் பதிலாகக் க எனஎழுதும்படி இலக்கணங் கற்பிக்கின்றது. இலக்கணங் கூறுவதின்படி நாம் எழுதினாலும் இயற்கைப் பிரமாணத்திற்கு ஒவ்வுகின்றதா ? இல்லையே.

இவ்வாறு இயற்கைப் பிரமாணத்திற்கு மாறாகக் கற்பிக்கும் இலக்கண விதியை யுவமானமாகக்கொண்டுதான் துவிதாத்வித நிலைமையினைச் சொல்லுகின்றார். இவ்வுவமானம் எவ்வளவு கற்பனையோ, அவ்வளவு கற்பனை யுவமேயத்திலு மிருக்குமாதலால், இங்ஙனமாய கற்பனு வுவமானத்தை யாதார

மாய்க்கொண்ட கொள்கையும் கற்பனையேயாமென்க. உவமானத்தில் அரை,
ஒன்று ஆகவொன்றரைக்கு அரைகெட்டு ஒன்றாயிற்று. இங்ஙனமே யுவமேய
த்திலும் அரைப்பங்கு உயிர், ஒருபங்கு பிரமம் ஆக வொன்றரைப் பங்குக்கு
அரைப்பங்கு கெட்டு ஒன்றாகவேண்டும். உவமானத்தில் அரைப்பங்கு கெட்
டதுமெய்யிலா? உயிரிலா? அல்லது இரண்டிலுமா? இதைக்குறித்து எந்த இல
க்கண நூலுங் கூறிற்றில. உவமானம் எப்படியாயினு மாகட்டும். உவமேயத்
தில்அரைப்பங்கு கெட்டது உயிரிலா? பிரமத்திலா? அல்லது இரண்டிலுமா?
அரை, ஒன்று ஆகஒன்றரை யொன்றாகுமென்பதிலேயே இவ்வளவு ஆக்ஷேப
மிருக்கும்போது பல கோடிசங்கியையுள்ள ஜீவர்களும், ஒருபிரமமும் ஆகப்
பலகோடி ஒன்றில், பலகோடிகெட்டு ஒன்றாகுமென்பது எவ்வளவு ஆக்ஷேப
த்திற்கிடம்? பலகோடியும் அழியா, ஒன்றும்அழியாது என்ற இப்பூர்வபக்ஷி
யார்க்கு ஷை மெய், உயிர் உவமான மெங்ஙனம் பொருத்தமாகும்? அரை,
ஒன்று ஆகவொன்றரை யொன்றாதலும்; பலகோடி, ஒன்று ஆகப் பலகோடி
யொன்று ஒன்றாதலும் கணிதசாஸ்திரவிரோதம்; பதார்த்த விஞ்ஞான சாஸ்
திரத்திற்கும் விரோதம். கணித சாஸ்திரத்திற்கும் விரோதமாய், பதார்த்த
விஞ்ஞான நூலுக்கும் மாறாய் ஒரு சாஸ்திரமுண்டென வொப்பினும் வை
திக தத்துவசாஸ்திர மொப்பவில்லையே. இனிக் க என்னும் உயிர்மெய்யெழு
த்தில் பாதி மெய்யும் பாதி யுயிருமாக வைத்து ஒரு கணக்கெடுத்துப் பார்ப்
போம். இப்படியே பாதியுயிரும் பாதிபிரமமுஞ் சேர்ந்தே யொருபொருளாக
வேண்டும். அப்போது பிரமம் அரைப்பூரணமேயொழிய முழுப்பூரணமல்ல;
ஒலிவடிவிலும் வரிவடிவிலும் க் அரையும், அ அரையு மிருக்க வேறுவேறு
இடமுண்டு; ஏனெனின் அவை கண்டமா யிருத்தலினா லென்க.

இது பாதி யெலுமிச்சங்கனியோடு பாதி கொய்யாக்கனியை யொன்று
சேர்த்தமைபோ லாம். இவ்வாறு உயிரையும் பிரமத்தையுஞ் சேர்க்கமுடி
யாது. ஏனெனின் பிரமம் நீக்கமற எங்கும் நிறைந்த பரிபூரணப்பொருள்.
ஆதலால் அதை யிரண்டு படுத்தி அதி லொருபாகத்தை யெடுத்துப் பிறிது
பொருளோடு சேர்த்து ஒன்று படுத்தல் ஆகாதகாரியம். கொய்யாக்கனி கண்
டப் பொருளாதலாலும். அக்கனி யில்லா வேறு இடம் இருக்கின்றதாதலா
லும் அதில் பாதியை யெடுத்து அஃதில்லா வேறு இடத்தில் வைக்கலாம்.
பிரமம் அவ்வாறு கண்டப்பொருளன்று. கண்டப்பொருளாயின் அதில் பாதி
யை யெடுத்துப் பிரமமில்லா விடத்தில் வைத்து, மற்றப்பாதியை யுயிருட
னே சேர்த்து ஒன்று படுத்தலாம். திருட்டாந்தமாக ஆகாயத்தை யிரண்டு
பகுத்தவும் அதிலொருபாகத்தை ஆகாயமில்லா விடத்தைத் தேடிவைக்கவும்
ஆகுமா? பூர்வபக்ஷியார் உவமானங் கூறுங்கால் 'உயிர்கள் ஏறி நடத்துகிற
சாதியும், மெய்கள் தாங்கிச் சுமக்கிற சாதியுமாகி விளங்கலால் சுமக்கிறசாதி
யெப்படி ஏறுகிற சாதியாகும்? பாகனுங் குதிரையும் ஒரு சாதியாகக்கண்ட
அனுபவிகளுக்கு உயிருமெய்யு மொன்றாகுமேயல்லது பாகன் வேறு குதிரை
வேறு என்று தெளிவார்க்கு உயிர் வேறும் மெய்வேறுமாக இரண்டு தனித்த
சாதிகளுண்டென்றே கொள்ளப்படும்' என்றாரன்றோ? இதில் பாகனுங் குதி
ரையும் ஏகதேசகண்ட அவ்வியாபகப்பொருள்கள். உயிரை அவ்வாறு கூறு
வது சுருதி சம்மதமாகலின் குற்றமில்லையேனும் பிரமத்தையு மவ்வாறு கூறு
வது சுருதி சம்மத மன்றே.

"பிரமம் எங்கும் பரிபூரணமன்று, இடை யிடையிலுள்ள வுயிர்களைவிட்டு
வியாபகமாயிருக்கின்றது, எங்ஙனமென்னின் எள்ளிலுள்ள திப்பிப்பாகம்
போக மற்றப்பாகத்தில் நெய் நிறைந்திருப்பது" போல என இவர் பக்கத்தி
னர் பிரமத்துக்குப் பூரண வியாபகங் கூறாமல் ஔபசிலேஷிக வியாபகங்

கூறுகின்றனர். ஒருபடி யெள்ளை யெடுத்துப்பிழிந்தால் பாதி நெய்யும் பாதி திப்பியுமாகின்றன வென வைத்துக்கொள்வோம். இதனால் எள்முற்றும் நெய்யில்லையென்றும் இடை யிடையேயுள்ள திப்பிப் பாகம்போக மற்றப்பாகத்திற்றானிருக்கின்றதென்றும் ஏற்படுகின்றன. நெய் முற்றும் இல்லாமையால் திப்பி யிருந்தவிடத்தில் நெய்யும், நெய்யிருந்தவிடத்தில் திப்பியுமில்லை. இவ்வுவமானத்தின் பிரகாரம் உயிரிருக்கிற விடத்தில் பிரமமும், பிரமமிருக்கிற விடத்தில் உயிரு மில்லையாதல்வேண்டும். இல்லாதபோது பிரமமும் உயிரும் அசையப்படாத கொடுஞ்சிறைச்சாலையிலிருத்தல்வேண்டும். பூரணமென்பது உயிரும் பிரமமுஞ் சேர்ந்தேயன்றித் தனித்தனியன்று, இரண்டுஞ் சேர்ந்து பூரணமாகுமேல் அதது இருக்கிறவிடத்தைவிட்டு வேறு இடத்திற்குப்பெயர்ந்து போகக்கூடாது. ஒருபடி நிறைய எள்ளும் கடுகும் போட்டு நிரப்பினால் அவை இரண்டும் இருந்த விடத்தைவிட்டு நிலைபெயர்தலும் போக்குவரவு புரிதலுங் கூடா. எள், கடுகு தவிர மற்ற எவ்வளவு பரமாணுப் பொருளாயினும் அவை யிருந்த விடத்தைவிட்டு நிலைபெயரா. எள்ளும், கடுகும், அணுக்களும் சடப்பொருள்களாகலின் அவை சிறைச்சாலையில் அடைந்திருந்தாலுந் துன்பமில்லை. உயிர் பிரமங்கள் சித்துப்பொருள்களா யிருப்பதால், கிட்டியில் அகப்பட்டுத் துன்புற்று வருந்துதல்போல் வருந்தவேண்டும். உயிர் நாமானதினால் அப்படி அசையக்கூடாத நிலைமையிலிருந்து துன்புறும் அநுபவம் நமக்கில்லையென நாமே சாக்ஷிகூறுவோம். பிரமம் திருமேனிகொண்டு பலவிடங்களில் போக்கு வரத்துச்செய்ததாக இவரே பல விடங்களிற் கூறியிருக்கின்றார். இடை யிடைகளில் உயிர்களிருப்பதால் அவைகளை விட்டுப் போதலும் வருதலும் கூடாமற்போவதோடுகூடப் பிரமம் கிட்டியில் அகப்படுவதுபோல் அகப்பட்டுத் துன்புறல்வேண்டும். ஔபசிலேஷிக வியாபகம் நித்தியமாகலின் பிரமமும் உயிர்களும் முத்தியிலும் துன்புற்றிருக்க வேண்டுவனவேயாம். உயிருக்கு அணுத்தன்மை யிலக்கணமாகக்கொண்டு இவ்வளவு பேசினேம். இவர் பக்கத்தில் பிரமத்துக்குப்போல வுயிருக்கும் விபுத்துவங் கூறுகின்றனமையின் ஷை ஔபசிலேஷிக வியாபகம் இவருக்குப் பொருந்தாது. எள்ளில் ஆங்காங்குத் திப்பியும் நெய்யும் இடைஇடையில் இருத்தலினால் ஔபசிலேஷிக வியாபகம் பொருந்தும். அங்ஙனமின்றிப் பிரமமும் உயிரும் தனித்தனி விபுத்துவமாகலின் பொருந்தாது. எது எப்படி யிருந்தாலும் பூர்வபக்ஷிகள் கற்பித்துக்கொண்ட ஔபசிலேஷிக வியாபகம் சுருதிவிரோதமாகலின் வைதிகர் ஒப்பாரென்றறிக.

பிரமத்தினின்றும் சேதனாசேதன உலகுண்டாகின்ற தென்பதற்கும், அவ்வுலகுக்குப் பிரமம் அபின்ன நிமித்தோபாதானகாரண மென்பதற்கும் சுருதி முதலிய சம்பிரமாணங்கள் வருமாறு:—

### பைங்களோபநிஷத் 3-வது அத்தியாயம்.

விசுவன், தைஜசன், பிராஞ்ஞன் இவர்களுக்குத் தம்தம் (அவித்தியா உபாதி போய் விட்டதினாலே பிரயத்தியக்காத்துமாவில் அடங்குகிறார்கள்.

### மைத்திராயணியுபநிஷத் 6-வது பிரபாடம்.

தனக்குள்ளேயே யிருக்கிற ஆத்மா (பிரமம்) வினிடத்திலிருந்து சகல பிராணன்களும், சகல லோகங்களும், சகல வேதங்களும், சகல தேவதைகளும், சகல பூதங்களும் உண்டாகின்றார்கள்.

### பிரமகீதை ஐதரேய உபநிடதம்.

வேத மோதியதே மெய்ப்பொருள் மற்றைப்பொருளெலா மித்தையே
வேது, மோதமேவுற்ற பொருளிருவகையாமதனிலொன்றென்று முண்மைய

தாய்ப்,போத ஆநந்தமாகிய சிவனும் பொருளது மற்றப்பொருளி, லேதமே வாமல் கற்பிதமாகு மற்றதனியல்லையு மிசைப்பாம். (சு0)

முண்டகோபநிஷத். உ-க-க.

ஓ சௌமியா! அது சத்தியமானது. எரிந்துகொண்டிருக்கிறஅக்கினியி லிருந்து அநேக ரூபமாய் அனேகபொறிகள் எப்படி யுண்டாகின்றனவோ, அப்படி அக்ஷரத்திலிருந்து பலவித தேகத்தை யுபாதியாயுடைய ஜீவர்க ளுண்டாகின்றார்கள். அதினிடத்திலேயே இலயமடைகின்றார்கள்.

பிரகதாரண்ணிய உபநிஷத்

மூன்றாவது அத்தியாயம் சு-ம் பிராம்மணம்.

பிரமத்திலிருந்து இந்தப் பிரபஞ்ச முண்டாயிற்று.

ஷை சு-ம் அத்தியாயம் க-வது பிராம்மணம்.

அக்கினியிலிருந்து அற்பமான பொறிகள் எப்படிக் கிளம்புகின்றனவோ. அப்படியே ஆன்மா (பிரமம்) வினிடத்திலிருந்து சகல பிரபஞ்சங்களும் சகல வுலகங்களும் எல்லாத் தேவதைகளும் சகல பூதங்களு முண்டாகின்றார்கள்.

யோகசிகோபநிஷத் சு-வது அத்தியாயம்.

கயிற்றிற் பாம்பென்கிற தன்மைபோல் ஜீவத்துவத்தை யறியவேண்டியது. கயிறு என்கிற ஞானமில்லாததினாலே ஒருக்ஷணத்திற்குள் கயிறு சர்ப்பமாய்க் காண்கிறது. அதுபோல் கேவல சித்தானது தானே பிரபஞ்சமாக விளங்குகிறது. பிரபஞ்சத்திற்கு உபாதான காரணம். பிரமத்தைத்தவிர வேறில்லை. ஆகையால் இந்தச் சகலமான பிரபஞ்சமும் பிரமமாகவே யிருக்கின்றன; வேறேயில்லை.

சிவரகசியம் 6-ம்அமிசம் ரிபுகீதை

2-அத்தியாயம்.

வாரிதியிலலைகுமிழிநுரைகடோன்றும் வகையெனவே வரையற்ற பரசிவத்தில், சாரமிலாச்சகலசராசரமுந் தோன்றும். (சுஅ)

விஷ்ணுபுராணம் 6-ம் அமிசம்

பிராகிருதப் பிரளயம்.

வியக்தா வியக்த சொரூபமான பிரகிருதி யாதுண்டோ, அதுவும், புருஷன் என்று சொல்லப்பட்ட ஜீவனும் இவ்விரண்டும் அந்தப் பரமாத்துமாவிலே இலயப்படுகின்றன.

இஃது

சித்தாந்த சேகரத்தின்பேரில் மறுப்பாக

"ஆரியன்" என்பவரால் எழுதப்பட்டு,

மதராஸ் ரிப்பன் பிரஸ்ஸில்

அச்சிடப்பட்டது.

1895ஹு மார்ச்சுமீ.

இதன் விலை அணா அரை; தபால்கூலி அணா அரை.